# நல்வாழ்வுக்கு வழி

முத்தமிழ்க் காவலர், கலைமாமணி
கி. ஆ. பெ. விசுவநாதம்

பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை · 600108

# முன்னுரை

ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஔவைப் பெருமாட்டி அருளிய மூதுரை 30-ம், நல்வழி 40-ம், 250 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய நன்னெறியில் 30-ம் ஆக 100 வெண்பாக்களைப் பொறுக்கி எடுத்து, அதற்கு எளிய நடையில் கருத்துரையும் எழுதி, "நல்வாழ்வுக்கு வழி" என்ற பெயரில் இந் நூலைத் தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்குகிறேன்.

நல்வழி; நன்னெறி; மூதுரை ஆகிய இம் மூன்று இலக்கியங்களும் மிகச் சிறந்தவை. அரிய கருத்துக்களை, எளிய நடையில், தெளிய உரைப்பவை; மக்களின் நல்வாழ்வுக்கு வழிகாட்டுபவை. நல்வழியில் நடந்து, நன்னெறியில் நின்று, மூதுரை கூறிய இம் மூதறிஞர்களைத் தமிழகம் ஒருபோதும் மறக்காது.

என் தந்தையார் என் ஏழாவது வயதில் எனக்கு அளித்த செல்வங்கள் இவை. நாள்தோறும் ஒவ்வொரு வெண்பாவாக மனப்பாடம் பண்ணியவை. இதிலுள்ள அரிய கருத்துக்கள் நாளடைவில் என் உள்ளத்தைக் கவர்ந்தன; நன்கு பயன்பட்டன. சுருக்கமாகக் கூறவேண்டுமானால், "இவை என் வாழ்வுக்கு வழிகாட்டின" என்றே கூறிவிடலாம்.

எனக்கு வழிகாட்டிய இவை இன்றுள்ள இளந்தலைமுறையினர்க்கும் வழிகாட்ட வேண்டும் என்பதே என் விருப்பம். கவிதையைச் சுவைக்க முடியாதவர்களுக்கு அதன் கருத்தையும் எளிய நடையில் எழுதிச் சேர்த்து வழங்குகிறேன்.

வெண்பாவும், உரைநடையும் நேருக்கு நேராக அமைந்திருப்பினும், அதன் உரைகள் நேருக்குநேராக அமையவில்லை. இக் காலத்திற்கேற்பச் சில விடப்பெற்றும், சில வருவிக்கப் பெற்றுமுள்ளன. இம் மாற்றங்கள் உயர்ந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பெற்றவை. ஆதலின், இதனை மன்னிக்குமாறும் புலவர் பெருமக்களை வேண்டிக் கொள்ளுகிறேன். தமிழக மக்கள் இதனைப் பயன்படுத்திப் பலனடைவது நல்லது.

1-1-1972
திருச்சிராப்பள்ளி-8

தங்களன்பிற்குரிய,
கி. ஆ. பெ. விசுவநாதம்

ஒருவனுக்கு நீ உதவி செய்தால், 'அதை அவன் எப்போது திருப்பிச் செய்வான்?' என எண்ணி ஏங்கியிராதே. அவன் மனிதன் ஆதலின் கட்டாயம் செய்து தீருவான். தென்னை மரங்கூட தன் கால்வழியே உண்ட நீரைத் தலை வழியே தந்து உதவி விடுகிறது. (1)

நல்லவர்களில் ஒருவருக்கு உதவி செய்தாலும், அது கல்லில் எழுதி வைத்த எழுத்துப்போல என்றும் நிலைத்து நிற்கும். அல்லாத, நெஞ்சில் ஈரமற்ற மக்கள் பலருக்கு உதவி செய்தாலும், அது நீரில் எழுதிய எழுத்துப்போல அப்போதே அழிந்து மறைந்துவிடும். (2)

வறுமை வந்தபோது இன்பம் துய்த்தற்குரிய இளமை வந்தெய்துமானால், அது கணவன் இல்லாத மங்கைக்கு அழகு வாய்த்ததுபோலத் துன்பத்தையே தரும். முதுமை வந்துற்றபோது இன்பம் துய்த்தற்குரிய பொருள்கள் வந்தெய்துமானால், அது நாளல்லாத நாளில் பூத்த நன் மலர்களைப்போலப் பயனின்றி அழிந்து போய்விடும். (3)

நன்றாகக் காய்ச்சிய பாலில் நீர் வற்றிப்போனாலும் அதன் சுவை குன்றாததுபோல, நன்மக்களிடத்தில் உள்ள செல்வம் வற்றிப்போனாலும், அவர்களின் குணம் குன்றுவது இல்லை. தன்மையறியாத மக்களிடத்து எவ்வளவுதான் நட்புக்காட்டி வேண்டினும், அவர்கள் குணம் மாறி இரக்கம் காட்டுவதில்லை. தீயிட்டுக் கொளுத்தினாலும் கூடச் சங்குகளின் நிறம் மாறுவதில்லையல்லவா? (4)

உருவத்தால் பருத்து நீண்டு உயர்ந்த மரங்களெல்லாம் பருவகாலம் வந்தாலன்றிப் பழுத்துப் பயன் தருவதில்லை. அதுபோல, ஒருவன் எவ்வளவுதான் அடுத்தடுத்து முயன்றாலும், அவனது பணி முடியுங் காலத்தைத்தவிர, மற்றக் காலங்களில் கைகூடுவதில்லை. (5)

நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருதலால். (1)

நல்லார் ஒருவர்க்குச் செய்த வுபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமில்லா நெஞ்சத்தார்க் கீந்த வுபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர். (2)

இன்னா இளமை வறுமைவந் தெய்தியக்கால்
இன்னா அளவில் இனியவும்—இன்னாத
நாளல்லா நாள்பூத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு. (3)

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (4)

அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட வுயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. (5)

கருங்கல் தூண் தாங்க முடியாத சுமையைத் தாங்க நேரிடுமானால், அது பிளந்து உடைந்து போகுமேயல்லாது தளர்ந்து வளைந்துகாட்டுவதில்லை. அதுபோல, தாங்க முடியாத மானக்கேடு ஒன்றைத் தாங்க நேரிடுமானால், தன்மையுடையோர் நெஞ்சம் பிளந்து உயிரை விடுவரே யன்றிப் பகைவர் முன்னே வணங்கிக் குனிவதில்லை. (6)

ஆம்பல் மலர் தான் இருக்கின்ற நீரின் அளவே உயரும். அதுபோல, ஒருவனுடைய அறிவு, அவன் கற்ற நூலின் அளவே உயரும். ஒருவனுடைய செல்வம் அவன் செய்த முயற்சியின் அளவே அமையும். ஒருவனது குணம் அவனைச் சூழ்ந்துள்ள மக்களுக்குத் தக்கவாறே அமையும். (7)

நல்லவனாக வாழ்வதுதான் நல்லது என எண்ணி விடாதே. நல்லவர்களைக் காண்பதுகூட நல்லது. நல்லவர் களின் சொற்களைக் கேட்பதுகூட நல்லது. நல்லவர்களோடு கூடி வாழ்வதும் நல்லது. இவை மட்டுமல்ல; நல்லவர்களைப் பற்றிப் பிறரோடு பேசிக்கொண்டிருப்பதுங்கூட நல்லது. (8)

தீயவனாக வாழ்வது மட்டும் தீது என எண்ணிவிடாதே. தீயவர்களைக் காண்பதுகூடத் தீது. தீயவர்களோடு பேசுவது கூடத் தீது. தீயவர்களோடு கூடி வாழ்வதும் தீது. இவை மட்டுமல்ல; தீயவர்களைப்பற்றிப் பிறரோடு பேசிக்கொண் டிருப்பதுங்கூட தீமை தரும். (9)

உழவன் நெல் வளர்வதற்கு மட்டுமே நீர் இறைக்கிறான். ஆனால், அது புல் வளர்வதற்கும் பயன்பட்டு வருகிறது. அது போல, பொழிகின்ற மழையானது நல்லவர்களின் வாழ்விற்கு மட்டும் பயன்படுவதில்லை; மற்றவர்களின் வாழ்வுக்கும் அது பயன்பட்டு வருகிறது. (10)

உற்ற விடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரந் தாங்கிற்
தளர்ந்து வளையுமோ தான். (6)

நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுமாங் குணம். (7)

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லாற்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றோ அவரே
டிணங்கி யிருப்பதுவும் நன்று. (8)

தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோ
டிணங்கி யிருப்பதுவும் தீது. (9)

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை (10)

முளைப்பது அரிசியே. ஆனாலும், அதைச் சுற்றியுள்ள உமி விலகிப் போய் விடுமானால், அரிசியானது தனித்து முளைப்பதில்லை. அதைப்போல், ஆற்றலுடைய வீரனாயினும் அவனைச் சுற்றியிருந்த கருவி, சார்பு, ஏவல் முதலியன விலகிப்போய் விடுமானால், அவனால் எதையும் செய்ய முடிவதில்லை. (11)

தாழம் பூ பெரியது. மகிழம் பூ சிறியது. எனினும், தாழை மடலுக்கு இருக்கும் மணத்தைவிட மகிழம் இதழுக்குள்ள மணம் அதிகம். ஆகவே, எவரையும் உருவத்தைக் கொண்டு மட்டும் கணிப்பது தவறாகும். ஏனெனில், கடல் மிகப் பெரியது. அதன் நீர் கழுவுவதற்கும்கூட உதவாது. ஊற்று மிகச் சிறியது, எனினும் அதன் நீர் அருந்துவதற்கும் ஏற்றதாக இருக்கும். (12)

அடர்ந்த காடுகளில் பெரிய கிளைகளைத் தாங்கி நிற்கின்ற மரங்கள் அவ்வளவு நல்ல மரங்கள் அல்ல. பலர் கூடிய அவையில், கொடுத்த நூலைப் படிக்க முடியாமல் நிற்பவர்களும், அவையின் குறிப்பை உணர முடியாமல் இருப்பவர்களுமே நல்ல மரங்கள் ஆவர். (13)

மயிலானது தனது சிறகை விரித்து ஆடுவதைக் கண்ட வான்கோழியும் தன் சிறகை விரித்து ஆடத் தொடங்குவது நகைப்பிற்குரியது. அதுபோல, கற்றவர்கள் சில கவிகளுக்குப் பொருள் விரித்துக் கூறுவதைக் கண்ட மற்றவர்களும், கற்றவர் அவையில் பொருள் விரித்துக் கூறத் தொடங்குவது நகைப்பிற்குரியதே. (14)

வேங்கைப் புலியின் நோயை நீக்கிய மருத்துவன் அப் புலியின் பசிக்கு அப்போதே உணவு ஆனானாம். அதுபோலப் பிறர் செய்த நன்றியை அறியும் ஆற்றலற்ற மக்களுக்குச் செய்த உதவி, செய்தவனுக்கே தீமையாக முடியும் அல்லது, கருங்கற் பாறைமீது போடப்பட்ட மண் பாண்டத்தைப் போல, அப்போதே அழிந்து போய்விடும். (15)

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபே
ராற்ற லுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமஞ் செயல் (11)

மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா ததனருகே சிற்றூரல்
உண்ணீரும் ஆகி விடும். (12)

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். (13)

கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகை விரித்தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (14)

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம். (15)

நீரில் எத்தனையோ மீன்கள் ஓடிக்கொண்டிருந்தாலும், தனக்கு உற்ற மீன் வருகிறவரை, கொக்கானது ஆடாமல் அசையாமல் காத்திருக்கும். அதுபோலவே, அடக்கமுடைய அறிஞர்களும் இருப்பர். அவர்களை அறிவற்றவர் என எண்ணி வெல்லுவதற்கு நினைப்பது பெரிதும் தவறாக முடியும். (16)

குளத்தில் நீர் நிறைந்தபோது வந்திருந்தும், வற்றிய போது பறத்தோடியும் விடுகின்ற பறவைகளைப் போல, செல்வம் நிறைந்தபோது வந்திருந்தும், வறுமை வந்தபோது விலகியும் போய்விடுகின்ற மக்கள் ஒருபோதும் உறவினராகார். அதே குளத்திலுள்ள கொட்டி, ஆம்பல், நெய்தல் கொடிகள் நீர் நிறைந்தபோதும், வற்றியபோதும் குளத்திலேயே கிடந்து உழல்வதுபோல, எக்காலத்தும் ஒட்டியிருப்பவரே சிறந்த உறவினராவர். (17)

பொன்னால் செய்த குடம் உடைவதில்லை. உடைந்தாலும் அது என்றும் பொன்னாகவே இருக்கும். அதுபோல, நன்மக்கள் கெட்டுப் போவதில்லை. கெட்டாலும் அவர்களின் சிறப்புக் குறையாது. ஒழுக்கம் தவறிய கீழ்மக்கள், கெட்டுப் போனால் அவர்கள் எதற்குப் பயன்படுவர்? ஆம், மண்ணாற் செய்த குடம் உடைந்து போனால் அது எதற்கு பயன்படப் போகிறது? (18)

ஒரு படியை ஆழமான கடல் நீரில் அமுக்கி முகந்தாலும் அது நான்கு படி தண்ணீரை முகந்து கொள்ளாது. அது போல நிறைந்த செல்வமும், உயர்ந்த தலைவனும் ஒருத்திக்கு அமைந்திருந்தாலும், அவளது அறிவிற்கும் செயலுக்கும் மீறிய பயனை அவளால் ஒருபோதும் அடைந்து விட முடியாது. (19)

'உடன் பிறந்தார், சுற்றத்தார்' என எண்ணி அவர்களையே நம்பி இருந்துவிடாதே, நோய்கூட நம் உடன் பிறந்தே நம்மைக் கொன்று விடுகிறது. நம் உடன் பிறவாமல் காடுகளிலும், மலைகளிலும் பிறந்துள்ள மருந்துச் செடிகள் நம் பிணியைத் தீர்ப்பதுபோல, நமக்கு உதவி செய்யும் மக்கள் அயலாரிலும் பலர் இருக்கின்றனர். (20)

அடக்கம் உடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு. (16)

அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு. (17)

சீரியர் கெட்டாலும் சீரியர் மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாவர்?—சீரிய
பொன்னின் குடமுடைந்தாற் பொன்னாகும்;
என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால். (18)

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடனீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தந்தம்
விதியின் பயனே பயன். (19)

உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு. (20)

நற்குண நற்செயல்களுடைய மனைவி வீட்டிலிருந்தால் அவ் வீட்டில் இல்லாத பொருள்கள் ஏதுமில்லை; எல்லாச் செல்வங்களும் இருப்பதாகவே கருதலாம். கடுஞ்சொற் களைச் சிடுசிடுப்பாகப் பேசிப் போராடுகிற மனைவியாக இருப்பாளேயானால், அவளிருக்கும் வீட்டுக்கு "வீடு" என்ற பெயரிராது; 'புலி தங்கியிருக்கும் புதர்' என்றே ஆகிவிடும். (21)

'மடநெஞ்சமே! நீ நினைத்தபடியெல்லாம் நடந்துவிடும்' என எண்ணி இறுமாந்திராதே! கற்பகத் தருவைச் சார்ந்த வர்களும் பயன் பெறாமல் திரும்புவதுண்டு. அது அவரவர் முன்னே செய்த செயலின் விளைவாகவே வந்து முடியும் (22)

கருங்கல் பிளவுபட்டுப் போனால், அது எவ்வகையிலும் திரும்ப ஒன்றுபடுவதில்லை. அதுபோலக் கயவர்களின் நட்பு பிளவுபடுமானால் அவர்கள் எவ்வகையிலும் திரும்ப ஒன்று படுவதில்லை, பொன்கட்டி பிளவுபட்டுவிட்டால் அது திரும்ப ஒன்றுபடுவதுபோல, நன்மக்களது நட்பு எப்போதாவது பிளவுபட்டாலும், திரும்ப ஒன்று சேர்ந்து விடும். அவர்களது கோபமும் நீரில் உண்டான வடுப்போல உடனே மாறிவிடும். (23)

சிறந்த தாமரை மலருள்ள 'குளத்தையே அழகிய அன்னம் விரும்பிச் சென்றடைகிறது. அதுபோல, கற்றறிந்த பெரியோர்களைக் கற்றறிந்த அறிஞர்களே விரும்பிக் சேர்வர். கல்வியறிவற்ற கீழ்மக்களை அத்தகைய கீழ் மக்களே சென்றடைவர். ஆம், கழுகும் காகமும் பிணத்தை யும் சுடுகாட்டையும் தானே சென்றடைகின்றன. (24)

தன்னிடத்தில் நஞ்சு இருப்பதை அறிந்தே நாகப்பாம்பு மறைந்து வாழ்கிறது. நஞ்சில்லாத நீர்ப்பாம்போ அச்ச மின்றி நீரில் வெளிப்படையாக வாழ்கிறது. அதுபோல மனத்தில் வஞ்சமுள்ள மக்கள் மறைந்து வாழ்வர். வஞ்ச மில்லா மக்கள் எவருக்கும் அஞ்சாமல், மறையாமல் வெளிப் படையாகவே வாழ்ந்து வருவர். (25)

இல்லா ளகத்திருக்க இல்லாத தொன்றில்லை
இல்லாளும் இல்லாளே யாமாயின் —இல்லாள்
வலிகிடந்த மாற்றம் உரைக்குமேல் அவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும். (21)

எழுதியவா றாமென் றிராமட நெஞ்சே
கருதியவா றாமோ கருமம்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல்
முற்பவத்திற் செய்த வினை. (22)

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வரே— விற்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். (23)

நற்றா மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்றிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம். (24)

நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். (25)

நாடாளும் மன்னனையும், நன்கு கற்றறிந்த புலவனை யும் சீர்தூக்கிப் பார்த்தால், மன்னனைவிட புலவனே அதிக சிறப்புடையவனாகத் தோன்றுகிறான். ஆம், மன்னனுக்குத் தன் நாட்டில் மட்டுமே சிறப்பு; கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு. (26)

கல்வியறிவற்ற மக்களுக்குக் கற்றறிந்தோரின் சொற்கள் எமனைப் போலத் துன்புறுத்தும். அறத்தின் வழியே நடக்க விரும்பாத மக்களுக்கு அறமே எமனாகத் தோன்றும். வாழை மரத்திற்கு அது ஈன்ற வாழைக்குலையே எமனாக முடியும். குடும்பத்திற்கு இசைய நடந்தொழுக விரும்பாத பெண் அவ்வீட்டிற்கே எமனாக வந்து முடிவாள். (27)

சந்தனக் கட்டையானது அரைத்து அரைத்துத் தேய்ந்து போனாலும், அதன் மணம் சிறிதும் குறைவு படாது. அது போல, உயர்ந்து சிறந்து வாழ்ந்த பெருங்குடி மக்கள் ஒருக்கால் கெட்டுப் போனாலும், அவர்களிடத்திலுள்ள செல்வம் குறையுமே தவிர, அவர்களின் மனம் குறைவ தில்லை. (28)

அளவுகடந்த சுற்றத்தினரும், உயர்ந்த குலமும், சிறந்த தோற்றமும், பிற நலன்களும், செல்வம் வந்து சேரும்போது தானே வந்து சேர்ந்துவிடும். அது பிரிந்து போகும்போது அவை அனைத்தும் தானாகவே ஒழிந்துபோய்விடும். (29)

செழித்து வளர்ந்த மரமானது, தன்னை வெட்டி வீழ்த்துகின்ற மனிதனுக்கு, அது தரையில் வீழும்வரை குளிர்நிழலைத் தந்து அவன் களைப்பைப் போக்கும். அது போல, சிறந்த அறிஞர்கள் தமக்கு தீமை செய்து வருபவர்க் குத் தாம் சாகும்வரை நன்மைகளையே செய்து மடிவர் (30)

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனின் கற்றோன்சிறப்புடையன்—மன்னனுக்குத்
தன்றேசம் அல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. (26)

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தோர் சொற் கூற்றம்
அல்லாத மாந்தர்க் கறங்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண். (27)

சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா தாதலால்—தந்தம்
தனஞ்சிறிய ராயினும் தார்வேந்தர் கெட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று. (28)

மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவும் உயர்குலமும் எல்லாம்—திருமடந்தை
ஆம்போ தவளோடும் ஆகும் அவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம். (29)

சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையுங் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம். (30)

முன் நாட்களில் செய்த நற்செயல்கள், தீச்செயல்களின் விளைவே, இந்நாளிலும், பின்நாளிலும் முன்வந்து நிற்கும். நல்வினை செய்தற்குரியது. தீவினை நீக்குதற்குரியது. எண்ணிப் பார்க்கும்பொழுது, எல்லா சமயத்தினருடைய முடிவும் இதுவாகவே இருந்துவரும். ஆகவே, தீதை ஒழி; நன்மையைச் செய்! (31)

இப் பரந்த உலகில், ஆராய்ந்து பார்க்கும்பொழுது சாதி இரண்டொழிய வேறில்லையென நன்கு தெரிகிறது. நீதி வழுவாத நெறிமுறையில் நின்று, பிறருக்கும் வழங்கி வாழ்பவன் மேற்குலத்தான் எனவும், அவ்வாறு வாழாதவன் கீழ்க்குலத்தான் எனவும் ஆகின்றனர். அற நூல்கள் அனைத்தும் இதையே கூறுகின்றன. (32)

இந்த உடம்பானது துன்பங்களைப் போட்டு நிரப்பி வைக்கும் பை போன்றது. நிலையில்லாத இவ்வுடம்பை நிலையானது என எண்ணி ஏமாந்துவிடாமல், நல்ல வழியில் விரைந்து நடந்து, நல்ல நெறியில் உயர்ந்து நில்லுங்கள். அவ்விதம் செய்தால், நல்லறிஞர்களைச் சேர்ந்து வாழும் நற்பேறு உங்கட்குக் கிடைக்கும். (33)

எதற்கும் உற்ற காலம் வந்தபோதல்லாமல், எவரும் எதையும் எண்ணி முடிக்க இயலாது. கண்ணற்ற ஒருவன் கைத்தடியை மாமரத்தின்மீது வீசியதும் மாங்காய் உதிர்வது போல, ஆங்காலம் வந்துவிட்டால் அனைத்தும் அப்பொழுதே முடிந்துவிடும். (34)

வரத் தகாதவைகளை வருந்தி அழைத்தாலும் வாராது. வருபவைகளைப் 'போ' என்று சொன்னாலும் போய்விடாது. இதனை உணர்ந்து கொள்ளாமல் ஏங்கியிருந்து, நெஞ்சத்தைப் புண்ணாக்கிக்கொண்டு, வருந்தி வருந்தி வாழ்வதே மக்களின் தொழிலாக இருந்து வருகிறது. (35)

புண்ணியமாம் பாவம்போம் போனநாள்செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள்—
எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்
தீதொழிய நன்மை செயல். (31)

சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறி முறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி. (32)

இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே
இடும் பொய்யை மெய்யென் றிராதே—இடுங்கடுக
உண்டாகின் உண்டாகும் ஊழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு. (33)

எண்ணி ஒரு கருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லால்—
கண்ணில்லான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோல் ஒக்குமே
ஆங்காலம் ஆகும் அவர்க்கு. (34)

வருந்திய யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றால் போகா—
இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம்நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில். (35)

ஒருவன் கடல் கடந்து பொருள்தேடி வந்து நல்வாழ்வு வாழ்வதைக் கண்ட மற்றொருவன், தானும் அத்தகைய வாழ்வு வாழ விரும்பி அதற்குரிய வழிகளில், வேண்டிய முயற்சிகளைச் செய்யாமல், தானும் கடல் கடந்து ஓடித் திரும்பி வருவதால் மட்டும் என்ன பயன் ஏற்பட்டுவிடும்? இது நன்மக்களின் நகைப்பிற்குரிய செயலாகவே முடியும். (36)

எந்த வகையில் எண்ணிப் பார்த்தாலும், இவ்வுடல் பொல்லாத புழுக்கள் நிறைந்ததாகவே தோன்றுகிறது. அறிஞர்கள் இதனை நன்கு அறிந்திருப்பர். ஆகவே, அவர்கள் தாமரை இலையிலுள்ள தண்ணீரைப்போல இவ்வுடலில் ஒட்டியும், ஒட்டாமலும் வாழ்வாரேயன்றி, இவ்வுடலைச் சிறப்பித்து எவரிடமும் பேசுவதில்லை. (37)

பொருள் சேர்ப்பதற்காகச் செய்யும் முயற்சிகள் எண்ணிறந்தன. ஆயினும், அவை நல்வழியில் செயல் திறனோடு செய்தாலன்றிக் கைகூடாது. என்றாலும், பொருளைத் தேடுவதைவிட மரியாதையை முயன்று தேடுவது நல்லது. ஏனெனில், பொருள் நிலையில்லாதது; மரியாதையோ நிலைத்து நிற்பது. (38)

நீர் நிரம்பி வழியும் ஆறு வற்றிப்போய், அதன் மணல் அடிசுடுகின்ற போதும், அது ஊற்றுப் பெருக்கால் உலக மக்களுக்கு நீரை வழங்கிவரும். அதுபோல, உயர்ந்த மக்கள் தம் செல்வம் வற்றி, வறுமை வந்த காலத்தும், ஏற்பவர்க்கு இல்லையென்னாமல் இயன்றவரை எதுவும் வழங்கி மகிழ்வர். (39)

இறந்து போன மக்களை எண்ணி ஆண்டு ஆண்டு தோறும் அழுதழுது புரண்டு வருந்தினாலும், மாண்டார் ஒரு போதும் திரும்ப வருவதில்லை. நமக்கும் சிலநாட்களில் அதே நிலைதான் ஏற்படும். ஆகவே, இவ்வுண்மையை உள்ளத்தே எண்ணி, நல்வழியில் நடந்து, நல்லவைகளைச் செய்து, நன்மக்களுக்கு வழங்கி, உண்டு கவலையற்று வாழ்வதே நலமாகும். (40)

உள்ள தொழிய ஒருவர்க் கொருவர் சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டும் கரையேறி னாலென்
உடலோடு வாழும் உயிர்க்கு. (36)

எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய் புன் குரம்பை—நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினால் ஆங்கமல நீர் போல்
பிரிந்திருப்பார் பேசார் பிறர்க்கு. (37)

ஈட்டும் பொருள் முயற்சி எண்ணிறந்த ஆயினும் ஊழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம்—தேட்டம்
மரியாதை காணும் மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணும் தனம். (38)

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்த்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (39)

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போம் அளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். (40)

துன்பம் மிகுந்த வயிறே! உன்னோடு வாழ இனி என்னால் முடியாது. ஒருநாள் உணவை விட்டு இரு என்றால் இருப்பதில்லை. இரண்டு நாள் உணவை ஏற்றுக்கொள் என்றால் அதையும் ஏற்றுக் கொள்வதில்லை. நான் உனக்காகப் படுகின்ற துன்பத்தையும் நீ ஒரு நாளும் அறிந்து கொள்வதில்லை. உன்னோடு வாழ்வதே தொல்லையாக இருக்கிறது. நான் என்ன செய்ய? (41)

ஆற்றங்கரையில் செழித்து வளர்ந்து நிற்கும் நீண்ட மரமும், அரசர் அறியச் சிறந்து வாழ்கின்ற வாழ்வும் ஒரு காலத்தில் வீழ்ச்சியுற்றுவிடும். உழுது உண்டு வாழும் வாழ்வே ஒருநாளும் வீழ்ச்சியுறாத வாழ்வாகும். அதற்கு ஒப்பான, பழுதற்ற தொழில் வேறு எதுவும் இல்லை. (42)

நல்வழியில் நடந்து நல்வாழ்வு வாழ விரும்புகிறவர்களைத் தடுப்பவர்களும், இறக்க விரும்புபவர்களைச் சாகாமல் தடுப்பவர்களும், இரந்துண்டு வாழ விரும்பிச் செல்பவர்களைத் தடுப்பவர்களும், இவ்வுலகில் உண்மையாகவே எவருமில்லை. (43)

பிறரிடம் சென்று இச்சகமாகப் பேசி பொருள்பெற்று வாழ்கின்ற வாழ்வானது, இரந்துண்ணும் வாழ்வைவிட இழிந்த வாழ்வு ஆகும். வயிறு வளர்ப்பதற்காக என்று இத்தகைய இழிந்த வாழ்வு வாழ்வதைவிட, மானமழியாமல் உயிரைவிட்டு விடுதல் மிகவும் சிறந்ததாகும். (44)

இறைவனை நினைந்து தவறு செய்யாமல் வாழ்ந்து வருபவர்களையும், ஒருக்கால் தவறு நேர்ந்துவிட்டாலும் அதற்காக வருந்திக் கண்ணீருகுத்து இறைவனிடம் மன்னிப்புக் கேட்டு வாழ்பவர்களையும், தீவினை ஒன்றும் செய்யாது. இதுவன்றித் தவறுகளைச் செய்துகொண்டே இருப்பவர்களின் வாழ்வை அத் தீச்செயல்களே சுட்டு அழித்து விடும். (45)

ஒருநாள் உணவை ஒழி என்றால் ஒழியாய்
இருநாளுக் கேலென்றால் ஏலாய்—ஒருநாளும்
என்னோ யறியாய் இடும்பைகூர் என் வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது. (41)

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (42)

ஆவாரை யாரே அழிப்பார் அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர்—ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல். (43)

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை—சீச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா
துயிர் விடுகை சால உறும் (44)

சிவாய நமஎன்று சிந்தித் திருப்போர்க்
கபாயம் ஒருநாளும் இல்லை—உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத எல்லாம்
விதியே மதியாய் விடும். (45)

தண்ணீரானது நில நலத்தினாற் சிறப்பை அடையும். தக்க செல்வம் படைத்தவர் ஈகைக் குணத்தினாற் சிறப்பை அடைவர். கண்களைப் பெற்றவர்கள் கருணை காட்டுவதால் சிறப்படைவர். பெண் மக்கள் கற்பழியாத் தன்மையால் பெருஞ் சிறப்பை அடைவர். (46)

சோம்பியிருக்கும் ஒருவன் தனக்குச் செல்வம் வந்து சேரவில்லை எனத் தெய்வத்தை நொந்துகொள்வதாற் பயனென்ன. அரிசியிட்ட பானைதான் பொங்கும். வெறும் பானை பொங்குவதில்லை. அதுபோல, நேரான வழியில் சரியாக உழைக்கின்ற இடைவிடா முயற்சியே செல்வம் சேர்ப்பதற்குரிய நல்வழியாகும். (47)

உற்றாரும், உறவினரும், பெற்றாரும், பிறந்தோரும் காலில் விழுந்து வணங்கி வேண்டினும், கீழ்மக்கள் தம்மிடம் உள்ள செல்வத்துள் சிறிதும் வழங்கமாட்டார். கரும்பானது தன்னைக் கசக்கிப் பிழிகின்ற மக்களுக்கே சாறு வழங்குவதுபோல, கீழ்மக்களும் தம்மை அடித்துத் துன்புறுத்தும் மக்களுக்கே விரைந்து வழங்குவர். (48)

அடிமைத் தொழில் புரிந்தும், இரந்து பொருள் பெற்றும், கடல் கடந்து சென்றும், கீழ்மக்களை மேன்மக்கள் எனக் கூறியும், பிறரைக் கவிபாடிப் புகழ்ந்தும் வாழ்வது மட்டுமல்ல, பெரும்பதவிகளைப் பெற்றும், பெருஞ் செல்வங்களைப் பெற்றும் வாழ்வதுகூட, எண்ணிப் பார்த்தால், யாவும் பாழுடம்பின் பசியைப் போக்குதற்கென்றே முடியும். (49)

விலைமாதர்களின் துணைகொண்டு நல்வாழ்வு வாழ விரும்புவது, அம்மிக் கல்லின் துணைகொண்டு ஆற்று வெள்ளத்தைக் கடக்க முயற்சிப்பது போன்றாகும். அது எப்போதும் நன்மை தராது; இப்போதும் செல்வத்தைத் தொலைத்து வறுமையையும், பிணியையும் கொடுத்துத் துன்புறுத்தும். இல்லாளே என்றென்றும் நல்லாள் என ஆவாள். (50)

தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணங்கொடையால்
கண்ணீர்மை மாறாக் கருணையால்—பெண்ணீர்மை
கற்பழியா வாற்றால் கடல்சூழ்ந்த வையகத்துள்
அற்புதமாம் என்றே அறி. (46)

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்
தறும்பாவம் என்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும் பானை பொங்குமோ மேல். (47)

பெற்றார் பிறந்தார் பெருநட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் என வேண்டார்—மற்றோர்
இரணங் கொடுத்தால் இடுவர் இடாரே
சரணம் கொடுத்தாலுந் தாம். (48)

சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல் கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம். (49)

அம்மி துணையாக ஆறிழிந்த வாறொக்கும்
கொம்மை முலைபகர்வார் கொண்டாட்டம்—இம்மை
மறுமைக்கும் நன்றன்று மாநிதியம் போக்கி
வெறுமைக்கும் வித்தாய் விடும் (50)

நீரும், நிழலும், மனையும், செல்வமும், சீரும், சிறப்பும், பேரும், புகழும் பெற்று வாழ்கின்ற பெருவாழ்வு வேண்டு மானால், அவை மிக எளிதாகப் பெறலாம். அதற்குச் செய்ய வேண்டியதெல்லாம் நல்லதை எண்ணுவதே. வஞ்ச மற்ற நெஞ்சமே வாழ வழிவகுக்கும் தன்மையுடையது. (51)

பாடுபட்டுத் தேடிய பணத்தைத் தானும் உண்ணாமல், பிறருக்கும் வழங்காமல், பூமியில் புதைத்து வைக்கின்ற மக்கள் மிகக் கெட்டவர்கள். அவர் உயிர்நீத்த பிறகு, அச் செல்வத்தை எவர் அனுபவிப்பர்? எனப் பிறரறியாமல் புதைத்து வைக்கும் பாவிகள் எண்ணிப் பார்ப்பதில்லை. (52)

வழக்குத் தீர்க்கும் மன்றத்திலிருந்துகொண்டு உண்மையை மறைத்துக் கூறுவோர், ஒருதலைச் சார்பாகச் சான்று கூறுவோர், ஒருதலைச் சார்பாக முடிவு கூறுவோர் ஆகிய இவர்களின் இல்லங்கள் குட்டிச் சுவராகி, எருக்கஞ் செடி முளைத்து, பாம்புகளும் வந்தடைந்து, பாழ்பட்டுப் போவதுடன், வாழ்வும் அழிந்துவிடும். (53)

ஆறில்லாத ஊரும், நீரில்லாத கிணறும், நெய்யில்லாத உணவும், உடன் பிறப்பில்லாத உடம்பும், மனைவியில்லாத வீடும், அறிவில்லாத செயலும், முறையே அழகின்றி, சிறப் பின்றி, சுவையின்றி, பயனின்றி, ஒளியின்றி, நலமின்றிப் பாழ்பட்டு அழியும். (54)

ஒருவன், தனக்கு வருகின்ற வருவாயைவிட அதிகமாகச் செலவுகளைச் செய்தால், அவன் செல்லுமிடமெல்லாம் பெருமை அழிந்து, அறிவுகெட்டு, நல்லவர்களாலும் பொல் லாதவனாகக் கருதப்பட்டு, பின் திருடனாகவும், தீயவனாக வும்கூடக் காட்சியளிக்க நேரிட்டுவிடும். (55)

நீரும் நிழலும் நிலம் பொதியு நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றும்
தரும் சிவந்த தாமரையாள் தான். (51)

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயின பின்யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம். (52)

வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை. (53)

நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டி பாழ்
ஆறில்லா ஊருக் கழகுபாழ்—மாறில்
உடற்பிறப் பில்லா உடம்புபாழ் பாழே
மடக்கொடி இல்லா மனை. (54)

ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

மானம், குடிப்பிறப்பு, கல்வி, அறிவு, ஈகைக்குணம், உணர்வு, நெறி, உயர்ச்சி, முயற்சி, இச்சை ஆகிய அனைத்தும் இந்தப் பாழான உடம்பில் பசி வந்தவுடன், சில மக்களிடம் பறந்தோடிப் போய்விடுகிறது. (56)

நாம் ஒன்றை நினைத்துச் செய்தால், அது தவறி வேறொன்றாக முடிகிறது. அன்றி, அதுவே ஒருக்கால் நிறைவேறி விடுகிறது. நாம் நினையாத ஒன்று சிலபொழுது நம் முன்னே வந்து நிற்கிறது. எண்ணிப் பார்க்கும்பொழுது இவை யாவும் இறைவனுடைய செயலாகவே தோன்றுகிறது. (57)

உண்பது உழக்கு அரிசியும், உடுப்பது நான்கு முழத் துணியும்தான். ஆனாலும், மனிதன் எண்ணுவதோ எண்பது கோடி நினைவுகள். எவ்வளவுதான் விழிப்பாகப் பாதுகாத்து வந்தாலும், உடைந்துபோகிற மண்கலத்தைப் போன்ற இவ்வுடம்பைப் பெற்று வாழும் வாழ்க்கை சாகும்வரை துன்பம் உடையதாகவே இருக்கும். (58)

மரம் பழுத்துவிட்டால் எவரும் அழைக்காமலேயே வௌவால்கள் மரத்தைச் சூழ்ந்து கொள்ளும். கன்றை ஈந்த பசுவானது சிறிதும் ஒளிக்காமல் பாலைப் பொழிந்து தருவதுபோல, தம்மிடத்துள்ள பொருளை ஒளிக்காது வழங்கும் வள்ளன்மையுள்ள மக்களை உலகினர் யாவரும் உறவினராகவே கொள்வர். (59)

தினை விதைத்தவன் தினையறுப்பான். வினை விதைத்தவன் வினையறுப்பான். அவனவன் செல்லும் வழியிலும், செய்த செயலிலும் வருகிற பலன்களை அவனவனே அடைந்து தீரவேண்டும். இதற்காகப் பிறர் என்ன செய்ய இயலும்? ஊரே கூடினும் ஒன்றுஞ் செய்ய இயலாது. (60)

மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவம் உயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்து போம். (56)

ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல். (57)

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன்—
கண்புதைத்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்தனையும் சஞ்சலமே தான். (58)

மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர். (59)

தாந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை என் செயலாம் ஊரெல்லாம் ஒன்றா
வெறுத்தாலும் போமோ விதி. (60)

இழுக்குள்ள பாட்டைவிட இசை மட்டும் நல்லது. உயர் குலம் பேசுவதைவிட ஒழுக்கமே நல்லது. குற்றமுள்ள வீரச் செயலைவிடக் கொடுநோய் நல்லது. பழிக்கு அஞ்சாத மனைவியோடு வாழ்வதைவிடத் தனித்திருந்து சாவது நல்லது. (61)

செல்வம் நிலைபெற்றதல்ல. அது ஆறு இடுகின்ற மேடும், மடுவும்போல அடிக்கடி மாறும் தன்மையுடையது. சோறும், நீரும் இரப்பவர்க் கீயும் உள்ளத்தைப் பெறுவது நல்லது; பெற்றால், அது என்றும் தாழாமல் உயர்ந்து நிற்கும். (62)

யானையின் உடலிலே பாய்கின்ற அம்பினால் பஞ்சுக் குவியலிலே பாயமுடியாது. அதுபோலக் கடுஞ்சொற் களானது இனிய சொற்களை வெல்லாது. ஆனால், இனிமை யான சொற்கள் கடுமையான சொற்களை வென்றுவிடும். ஆம். இரும்பினாற் செய்த கட்ப்பாரைக்குப் பிளவுபடாத கருங்கற் பாறை, பசுமரத்தின் வேருக்குப் பிளவுபட்டுவிடும். (63)

கல்வியறிவு இல்லாவிடினும் பொருள் மிகுந்துவிடு மானால், பலரும் அவனிடம் சேர்ந்து போற்றிப் புகழ்ந்து கொண்டிருப்பர். பொருள் இழந்த ஒருவனைக் கட்டிய மனைவியும் விரும்பாள். பெற்ற தாயுங்கூடப் பொருட் படுத்த மாட்டாள். அவன் வாய்ச் சொல் எவரிடமும் செல்லுபடி யாவதில்லை. (64)

ஆல மரமும், அத்தி மரமும் பூக்காமலே காய்ப்பது போல, ஏவாமலே அறிந்து செய்யும் மக்களும் சிலர் இருக் கின்றனர். நன்றாக உழுது எருவிட்டு விதைத்தாலும் முளைக்காத சில விதைகளைப் போல, இடித்திடித்துச் சொல்லி உணர்த்தினாலும் உணராத மக்களும் சிலர் இருக் கின்றனர். (65)

இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று சால
ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று—வழுக்குடைய
வீரத்தின் நன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தின் நன்று தனி. (61)

ஆறிடு மேடும் மடுவும்போல் ஆஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து. (62)

வெட்டெனவே மெத்தனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். (63)

கல்லானே ஆனாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள் மற் றீன்றெடுத்த தாய் வேண்டாள்
செல்லா தவன் வாயிற் சொல். (64)

பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலுந் தோன்றா துணர்வு. (65)

முத்துச் சிப்பி கருக்கொள்ளும்பொழுதே அழியத் தொடங்குகிறது. மூங்கில் முத்தை விளைக்கும் பொழுதே அழியத் தொடங்குகிறது. வாழை மரம் குலையை ஈனும் பொழுதே அழியத் தொடங்குகிறது. அயல்மாதர்மீது மனம் வைக்கும் பொழுதே மக்களின் கல்வி, அறிவு, பொருள், மானம், மரியாதை ஆகிய அனைத்தும் அழியத் தொடங்கி விடுகிறது. (66)

'ஊழ்வினையை வெல்வதற்கு வேதமுதலான நூல்களில் வழி ஒன்றும் காணப்படவில்லையே' என நெஞ்சே நீ கவலைப்படவேண்டாம். ஏனெனில், உயர்ந்த நெறியில் நிமிர்ந்து நடப்பவர் சிறந்த பலனை விரைந்து பெறுவர். அவரை ஊழ்வினை எதுவும் செய்துவிடாது. (67)

நாணல் புல்லை அறுத்தவர்கள் நாணற் புல்லைக் கொண்டே அதைக் கட்டுவர். அது புல் என்றும், கயிறு என்றும் தோன்றாமல் இரண்டற ஒன்றாகவே தோன்றும். அதுபோல, மக்களும் பிறவியால் உயர்வு தாழ்வு கருதாமல் மக்களோடு மக்களாக இரண்டறக் கலந்து வாழ்ந்தாக வேண்டும். அவ்வாறு செய்ய இயலாதவர்களால் இறைவனைச் சேரவும் இயலாது. (68)

முப்பது ஆண்டுகளாகியும் ஒருவனுக்கு அவன் கற்ற கல்வியின்படி நடந்தொழுக முடியாதிருக்குமானால், அவன் கற்ற கல்வியால் அவன் பெற்ற பயன் என்ன? அவனால் பிறருக்கும் பயன் என்ன? ஒன்றுமிராது என்பது மட்டுமல்ல; அவன் மூப்பிலும் பயன் பெறமுடியாது. (69)

திருக்குறளும், திருமறை முடிவும், தேவாரமும், திருக்கோவையும், திருவாசகமும், திருமூலர் திருமந்திரமும் ஆகிய நூல்கள் மக்கள் நன்னெறியில் நடந்து இறைவனைச் சேர வேண்டும் என்ற ஒரே வாசகத்தைக் கூறுவன என்று உணர வேண்டும். (70)

நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறும் காலத்தில்
கொண்ட கருவழிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடீஇ
போதம் தனம் கல்வி பொன்றவருங் காலத்தே
மாதர்மேல் வைப்பார் மனம். (66)

வினைப்பயனை வெல்வதற்கு வேதம் முதலாம்
அனைத்தாய நூலகத்தும் இல்லை—நினைப்பதெனக்
கண்ணுறுவ தல்லால் கவலைபடேல் நெஞ்சே மெய்
விண்ணுறுவர்க் கில்லை விதி. (67)

நன்றென்றும் தீதென்றும் நானென்றும் தானென்றும்
அன்றென்றும் ஆமென்றும் ஆகாதே—நின்ற நிலை
தானதாம் தத்துவமாம் சம்புறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள். (68)

முப்பதாம் ஆண்டளவில் மூன்றற்றொருபொருளைத்
தப்பாமல் தன்னுட் பெறானாயின்—செப்புங்
கலையளவே யாகுமாம் காரிகையார் தங்கள்
முலையளவே யாகுமாம் மூப்பு. (69)

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒரு வாசகமென் றுணர். (70)

நற்குணம் படைத்த மக்கள், தம்மைப் புகழாதவர்களுக்குங்கூடத் தம்மாலியன்ற அளவு பொருள்களை வலியச் சென்று கொடுத்து உதவுவார்கள். நாக்குத் தன்னைப் புகழ்ந்து பேசும் என எண்ணியா கையானது இனிய உணவுகளை வாய்க்கு வலியக் கொண்டுபோய்க் கொடுக்கிறது? இல்லை; அதன் இயல்பு அது. (71)

பெரும்பாலான மக்களிடத்தில் ஏதாவது உதவி பெற வேண்டுமானால், அதற்குச் சிலருடைய துணை தேவையாக இருக்கிறது. இது உலக இயல்பு போலும்! பசுவின் பாலைச் கறப்பதற்குக்கூட கன்றின் உதவி தேவைப்படுகிறது அல்லவா? (72)

பிறருக்கு உதவ விரும்பாத மக்களின் செல்வம் அவருக்குப் பின் வேறொருவரால் பிறருக்குப் பயன்படும். அப்போது வழங்குபவருடைய செல்வமாக அது கருதப் படுமே தவிர, வைத்துவிட்டுப்போன கஞ்சனுடைய செல்வ மாக அது கருதப்படுவதில்லை. மேகங்கள் கடல் நீரைத் தான் கொண்டுவந்து பொழிகின்றன. எனினும் மக்கள் அதை மழைநீர் எனக் கருதுகிறார்களேயன்றிக் கடல் நீர் எனக் கருதுவதில்லை. (73)

நெருங்கிய நண்பர்களாயிருந்த இருவர், பின் மனம் மாறுபட்டு, பிறகு ஒருகாலத்தில் மறுபடியும் கூடினாலும் அவர்களின் நட்பு முன்போல வலுப்பெறுவதில்லை. நெல்லிலே உள்ள உமி சிறிது நேரம் விலகியிருந்து மீண்டும் நெல்லோடு போய்ச் சேர்ந்தாலும், அதனிடத்தில் முன்பு இருந்த உறுதிப்பாட்டைக் காண முடிவதில்லை. (74)

கணவனும், மனைவியும் ஒத்த கருத்துடன் ஒரு செய் கையை ஒரே நோக்குடன் செய்தாக வேண்டும். கண்கள் தனித்தனியே இரண்டாக இருந்தாலும், அவை ஒரு. பொருளை ஒரே நோக்குடன் பார்ப்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். மாறுபட்ட கண்களுக்கு மாறுபட்டுத் தோன்று வதுபோல மாறுபட்ட மனை வாழ்வும் வேறுபட்டுப் போய் விடும். (75)

என்றும் முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்—துன்று
சுவை
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழவோ
நாவிற் குதவும் நயந்து. (71)

தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவரால் தாங்கொள்க—தங்கநெடும்
குன்றினால் செய்தனைய கொங்கையாய் ஆவின்பால்
கன்றினால் கொள்ப கறந்து. (72)

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறாம்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல் முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. (73)

நீக்கம் அறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும்
—பூக்குழலாய்
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மை நிலை போம். (74)

காதல் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டும் ஒன்றுமதி என்முகத்தாய்
நோக்குமால்
கண்ணிரண்டும் ஒன்றையே காண். (75)

உள்ளங் கொதித்துக் கிளம்புகின்ற கோபத்தை அடக்கும் குணமே குணங்கள் எல்லாவற்றிலும் சிறந்த குணமாகும். மக்களின் செயலும் அத்தகையதே. வெள்ளத்தை அணை கட்டித் தடுத்து நிறுத்துவது அரிதா? உள்ள கரையைப் பெயர்த்து விடுவது அரிதா? என்பதை எண்ணிப் பார்ப்பது நல்லது. (76)

உண்மையை உணரமுடியாமற் செய்கின்ற ஐம்புலன்களும், அறிவற்ற மக்களை ஆட்டிவைக்குமேயன்றி அறிவுடைய மக்களை ஒன்றும் செய்வதில்லை. சூறாவளிக் காற்றாக இருந்தாலும், அது சிறு துரும்புகளைச் சுழற்றுமேயன்றிக் கற்றூண்களைச் சுழற்ற முடிவதில்லை. (77)

எத்தனையோ ஓட்டைகள் உள்ள உடம்பிலிருந்து உயிர் ஓடிவிடுவது வியப்பன்று. ஓடாமல் பல ஆண்டுகள் தங்கியிருப்பதுதான் வியப்பு! ஓட்டையுள்ள குடத்திலிருக்கும் நீர் ஓடிவிடுவதில் என்ன வியப்பு! ஓடாமல் இருப்பதுதான் வியப்பு! (78)

அன்பு கனியும் உள்ளத்தைப் பெறாத மக்கள், சிறந்த இடம், நிறைந்த பொருள், மிகுந்த ஆட்கள், உயர்ந்த வாகனம் ஆகியவைகளைப் பெற்றிருந்தாலும், அவைகளால் அவருக்கு என்ன பயன்? மொழியிலார்க்கு முதுநூலும், விழியிலார்க்கு விளக்கும் என்ன பயனைத் தரப்போகின்றன! (79)

கல்வியிற் சிறந்த பெரியோர் தமது உயர்வைத் தாமே மதித்துக் கொள்வதில்லை; தம்மிலும் தாழ்ந்தவரிடமும் சென்று அவரது துன்பத்தைப் போக்கி வருவர். பரந்து விரிந்த கடலிலுள்ள நீரானது, மிகச்சிறிய உப்பங்கழிகளிலும் சென்று தங்கியிருந்து உதவிவருகிறது. (80)

உள்ளம் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு (76)

பொய்ப்புலன்கள் ஐந்தும் நோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம்—துப்பின்
சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறா வளிபோய்ச்
சுழற்றும் சிறுபுன் துரும்பு (77)

வருந்தும் உயிர் ஒன்பான் வாயில் உடம்பில்
பொருந்துதல் தானே புதுமை—திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு. (78)

இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவல்மற்
றெல்லாம் இருந்துமவற் கென்செய்யும்—நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு. (79)

தம்மையும் தங்கள் தலைமையையும் பார்த்துயர்ந் தோரி
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மின்
இழியினும் செல்வர் இடர்தீர்ப்பர் அல்கு
கழியினும் செல்லாதோ கடல். (80)

என் தந்தை இரப்பவர்க்கீந்து வறுமையடைந்தான் எனக்கூறி அவன் பிள்ளைகள் ஈகைக் குணத்தைக் கைவிடுவதில்லை. செழித்து வளர்ந்து நின்ற வாழை மரமானது காயும், கனியும் ஈந்ததினாலேயே அழிந்துபோயிற்று என்பதை அறிந்தும், அதனடியில் தோன்றிய கன்றும் அவ்வாறு காயும், கனியும் கொடுக்க மறுப்பதுமில்லை; மறப்பதுமில்லை. (81)

இனிய சொற்களால்தான் மக்கள் மகிழ்ச்சியடைந்து வருகிறார்கள்; கடுஞ் சொற்களைக் கேட்டு எவரும் மகிழ்ச்சியடைவதில்லை. அனல் கக்கும் சூரியனுடைய ஒளியைக் கண்டு கடல் பொங்கி எழுவதில்லை; குளிர்ச்சியுள்ள சந்திரனுடைய ஒளியைக் கண்டுதான் கடல் பொங்கி எழுகிறது, (82)

நல்லொழுக்கமுள்ள அறிஞர்களின் வரவைக்கண்டு நன்மக்கள் மனமகிழ்ச்சியை அடைகின்றனர். தீயவர்களின் வரவைக் கண்டு அஞ்சி நடுங்குகின்றனர். இனிய கனிகளைக் கொடுக்கின்ற மாமரமானது, தென்றல் காற்றின் வருகையைக் கண்டு இளந்தளிர்களை விட்டுச் செழித்து நிற்கிறது. ஆனால், அதே மரம் ஆடிக்காற்றின் வருகையால் ஆடி அசைந்து; இலைகளை உதிர்த்து வாடி, வதங்கி நிற்கிறது. (83)

சிறந்த மக்கள் பிறருக்கு வந்த துன்பங்களைத் தமக்கு வந்ததாகவே கருதி, மனமிளகி உருகி வருந்தும் சிறந்த உறுப்புக்களான கண்கள் தமக்கு ஒரு துன்பமும் நேராத போதும், பிற உறுப்புக்கள் துன்பமடைவதைக் கண்டு வருந்திக் கலங்கி அழுவதைக் காண்கிறோம். (84)

பிறப்பைக் கொண்டு உயர்வு தாழ்வு கற்பிப்பது பெருந்தவறு. குணத்தைக் கொண்டு கூறுவதே சிறப்புடையதாகவிருக்கும். மணியைப் பாம்பினிடத்துத் தோன்றியது என்பதற்காக வெறுப்பவரும், நஞ்சு பாற்கடலில் தோன்றியது என்பதற்காகக் குடிப்பவரும் இங்கில்லை. (85)

எந்தைநல் கூரிந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீ இ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின் கீழ்க்
கன்றும் உதவும் கனி. (81)

இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்
ததிர் வளையாய் பொங்கா தழற்கதிரால்
தண்ணென்
கதிர்வரவால் பொங்கும் கடல். (82)

நல்லோர் வரவான் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவான் அழுங்குவார்—வல்லோர்
திருந்தும் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்தும் சுழல்கால் வர. (83)

பெரியவர்தம் நோய்போல் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைச்
கண்டு கலுழுமே கண். (84)

ஆக்கும் அறிவான் அலது பிறப்பினால்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு. (85)

இல்லறத்தை வெறுத்துத் துறவு பூணத் துணிவு கொண்டிருக்கும் எவனும், பெண் மக்களோடு அடிக்கடி பேசும் பழக்கம் வைத்திருந்தால் அவனது உறுதி தளர்ந்துபோய் விடும். கருங்கல்லாக இருந்தாலும், அதில் எறும்பு ஊர்ந்து கொண்டேயிருந்தால் அதில் குழி விழுந்துவிடுவது இயல்பேயாம். (86)

நற்குணம் படைத்த மக்களிற் சிலர்கூடக் கீழ்மக்களோடு தொடர்புகொண்டு கீழான சொற்களைப் பேசிவருகின்றனர். இது வியப்பிற்குரியது. நன்றாகப் பழுத்த கனிகளுடைய சோலையிற் புகுந்த காகம், அவற்றை உண்ணாமல் வேப்பங் கனிகளையே விரும்பி உண்ணுகிறது. (87)

கல்வி அறிவு இல்லாத மக்களோடு சேர்ந்தால் கற்று உணர்ந்த நல்லறிஞர்களுடைய பெருமையும் குறைந்து காணப்படும்.. கனமான இரும்புத்துண்டுகூடத் தெப்பத்தைச் சேர்ந்துவிட்டால் அதன் எடை குறைந்து மிதக்கத் தொடங்கி விடும். (88)

வலுவிழந்த மக்களுக்கு வலிமையுள்ள மக்கள்தாம் மிகவும் வருந்தி உழைத்து உதவி வருவர். அதற்காக அவர்களிடம் கைம்மாறு எதுவும் எதிர்பார்க்கவில்லை. வாயிலுள்ள பற்கள் கைம்மாறு கருதியா எளிய நாவிற்குக் கடின உணவை மென்று கொடுத்து உதவிவருகின்றன? (89)

நல்லறிஞர்கள் கோபித்துப் பேசினாலும், வருகிற மக்களுக்கு ஏதாவது கொடுத்து அனுப்புவர். கீழ்மக்கள் இனிய சொற்களை மனங்கனிந்து பேசினாலும், எவர்க்கும் எதுவும் வழங்குவதில்லை. வாழை பழுக்காமல் காயாக இருந்தாலும் பயன்படும்; எட்டிப் பழுத்தாலும் எதற்குப் பயன்படும்? (90)

பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்
திகழ்ச்சி தருநெஞ்சத் திட்பம்—நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்ற முலைப் பேதாய் பலகால்
எறும்பூரக் கற்குழியுமே. (86)

உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விருப்புஞ் செழும்பொழில்வாய்
வேம்பன்றோ
காக்கை விரும்பும் கனி. (87)

கல்லா அறிவின் கயவர்பால் கற்றுணர்ந்த
நல்லார் தமது கனம் நண்ணாரே—வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள் (88)

கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாம்செய்வர்—அம்மா
முளைக்கும் எயிறு முதிர் சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று. (89)

முனிவினும் நல்குவர் மூதறிஞர், உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்—நனி விளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்
தாயினும் ஆமோ அறை. (90)

நல்ல வழியில் பொருளைத் தேடிய மக்கள், சாவு தம்மை வந்து தழுவுமுன்னே அறச்செயல்களைச் செய்து மகிழ்ச்சியடைவர். அது வந்துவிட்டால் என்ன செய்ய முடியும், வெள்ளம் வருமுன்னே அணைகட்டி வைக்கமுடியாத மக்களால் வெள்ளம் வந்தபின்பு என்ன செய்ய இயலும்! (91)

பெருந்துன்பம் பிறரைத் தாக்கப் போவதாக அறிஞர்கள் அறிந்தால், அவற்றை விரைந்து சென்று தாமே தாங்கி அவர்களைக் காப்பாற்றுவர். உடம்பிலுள்ள பிற உறுப்புகளைத் தடியோ, கத்தியோ, ஈட்டியோ தாக்க வந்தால்! கையானது விரைந்து சென்று அவற்றைத் தானே தாங்கி அவைகளைக் காப்பாற்ற முயலுகிறது. (92)

உயர்ந்த நூல்களை ஆராய்ந்து அறியும் ஆற்றலும் அறிவும் பெறாதவர்கள் அறச்செயல்களை மிகுதியாகச் செய்துவந்தாலும், அவைகளால் அவர் பயன் பெறார். வைரம் பாய்ந்த மரத்தினால் செய்யப்பெற்ற கதவுகளாயிருப்பினும் தாழ்ப்பாள் ஒன்று இல்லையாயின் அதற்குக் காக்கும் வலிமை சிறிதும் இராது. (93)

தம்மைப் பிறர் தூற்றாமல் போற்றிக்கொண்டிருக்க வேண்டுமென இழிந்த மக்கள் விரும்பி முயலுவர். நல்லறிஞர்கள் இத்தகைய செயல்களை ஒருபோதும் விரும்புவதில்லை. ஆறு, குளம், ஏரி முதலியவைகளுக்குக் கரைகள் தேவைப்படுகின்றன. கடலுக்கு ஏது கரை! (94)

தம்மீது சாட்டப்படுகின்ற பழிகளைக் கண்டு அறிவுடைய மக்கள் அஞ்சுவர். அறிவற்ற மக்கள் சிறிதும் பழிபாவங்களுக்கு அஞ்சுவதில்லை. ஒளிபெற்ற நல்ல கண்களே இருளைக் கண்டு அஞ்சுகின்றன. குருட்டுக்கண் ஏன் அஞ்சும்? (95)

கொள்ளுங் கொடுங்கூற்றம் கொல்வான்
குறுகுதன்முன்
உள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் பேசு. (91)

பேரறிஞர் தாக்கும் பிறர்துயரம் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவர்—நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன் கோ லடிதன்மேல்
கைசென்று தாங்கும் கடிது. (92)

பன்னும் பனுவற் பயன்தேர் அறிவிலார்
மன்னும் அறங்கள் வலியிலவே—நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலாதாயின் தான். (93)

எள்ளா திருப்ப இழிஞர் போற் றற்குரியர்
விள்ளா அறிஞரது வேண்டாரே—தள்ளாக்
கரைக்காப் புளது நீர் கட்டு குளம் அன்றிக்
கரைகாப் புளதோ கடல். (94)

அறிவுடையார் அன்றி அது பெறார் தம்பால்
செறிபழியை அஞ்சார் சிறிதும்—பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோ இருளைக் கண்டு. (95)

கற்றறிந்த அறிஞர் பெருமக்களை மேன்மக்களே மதிப்பர். கீழ்மக்கள் அவ்வாறு அவரைப் போற்றி மதிப்ப தில்லை. புளிச்சோறு வாழைப்பழத்தை வெறுத்து ஒதுக்கு கிறது. பாற்சோறோ விரும்பி வரவேற்கிறது. (96)

பிறருக்கு உதவுகிற நன்மக்கள் கெட்டுப் போயிருப்ப தைக் கண்டால் எவரும் இளகி உதவி செய்வர். கேடு விளைவிக்கும் மக்கள் வாடி வருந்துவதைக் கண்டால் எவரும் என் செய்வர்? நெற்பயிர் வாடுவதைக் கண்டால் நீர் இறைப்பர். முட்செடி வாடுவதைக் கண்டால் எவரும் என் செய்வர். (97)

நல்லவர்களோடு கொள்ளும் நட்பு நாள்தோறும் வளர்ந்து நன்மை பயக்கிறது. அல்லாதவர்களோடு கொண்ட நட்பு அவ்வாறு ஆவதில்லை. நல்ல பிஞ்சுகள் நாள்தோறும் முற்றிக் கனியாகிப் பயன்படுகிறது. வெம்பிய பிஞ்சு கனியாகிப் பயன்படுவதில்லை. (98)

தீய குணமுள்ள மக்கள் இருவர் தம்முள் அதிகமாக நட்பு கொண்டிருந்தாலும், அவர்களுக்குள் நட்பு தொடங்கிய நாளிலிருந்தே தீமையும் தொடங்கி வளர்ந்து வரும். பூக்களானது செடியிலும் கொடியிலும் பூத்தாலும் அது பூக்கும் நாளிலிருந்தே மணம்வீசத் தொடங்கிவிடுகிறது. (99)

பொன்னும், மணியும் பூண்டுள்ள மன்னர்கள் கல்வி யிலும், அறிவிலும் சிறந்த அறிஞர்களோடு ஒப்பாவதில்லை. காது, மூக்கு, கழுத்து, கைவிரல்கள் எவ்வளவுதான் நகை அணிந்து இருந்தாலும், அது அணியாத கண்ணுக்கு ஒப்பாவதில்லை. (100)

கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர் தாம் என்றும் மதியாரே—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். (96)

தக்கார்க்கே ஈவர் தகார்க்களிப்பார் இல்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய். (97)

நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்.
அல்லார் செயுங்கேண்மை ஆகாதே—நல்லாய்கேள்
கய்யமுற்றின் தின்தீங் கனியாம் இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம். (98)

கற்றறியார் செய்யுங் கடுநட்பும் தாங்கூடி
உற்றுழியும் தீமைநிகழ் வுள்ளதே—பொற்றொடீஇ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
அன்றே மணமுடைய தாம். (99)

பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னும் அறிஞரைத்தாம் மற்றொவ்வார்—
மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே அது புனையாக்
காணுங்கண் ஒக்குமோ காண். (100)

முற்றும்

முத்தமிழ்க் காவலர்

## கி. ஆ. பெ. விசுவநாதம்

## நூ ல் க ள்

மும்மணிகள்
நான்மணிகள்
ஐந்து செல்வங்கள்
ஆறு செல்வங்கள்
எண்ணக் குவியல்
அறிவுக்கு உணவு
தமிழ் மருந்துகள்
வள்ளுவர் உள்ளம்
திருக்குறள் புதைபொருள் I
திருக்குறள் புதைபொருள் II
வள்ளுவரும் குறளும்
திருக்குறள் கட்டுரைகள்
வானொலியிலே
தமிழ்ச் செல்வம்
தமிழின் சிறப்பு
நபிகள் நாயகம்
திருச்சி விசுவநாதம்
எனது நண்பர்கள்
மணமக்களுக்கு
இளங்கோவும் சிலம்பும்
திருக்குறளில் செயல்திறன்
அறிவுக் கதைகள் 90
நல்வாழ்வுக்கு வழி

பாரி நிலையம்

184, பிராட்வே, சென்னை - 600 108.

Wrapper Printed by
Super Power Press, Madras-600 001. Phone: 584492